# ஸ்ரீகூரத்தாழ்வான் வாழித்திருநாமம்

சீராரும் திருப்பதிகள் சிறக்க வந்தோன் வாழியே
தென்னரங்கர் சீரருளைச் சேருமவன் வாழியே
பாராரும் எதிராசன் பதம் பணிந்தோன் வாழியே
பாடியத்தின் உட்பொருளைப் பகருமவன் வாழியே
நாராயணன் சமயம் நாட்டினான் வாழியே
நாலூரான் தனக்கு முக்தி நல்கினான் வாழியே
ஏராரும் தையில் அத்தத்திங்குதித்தான் வாழியே
எழில் கூரத்தாழ்வான்தன் இணையடிகள் வாழியே.

பொருள் விரிக்கும் எதிராசர் பொன்னடியோன் வாழியே
பொன்வட்டில்தனையெறிந்த புகழுடையோன் வாழியே
மருளிவிரிக்கும் முக்குறும்பை மாற்றவந்தோன் வாழியே
மயர்வறவே மெய்ஞ்ஞானம் விளங்கிடுவோன் வாழியே
இருள்விரிக்கும் சிவமிரட்டெழுத்திட்டோன் வாழியே
ஏதமறவெவ்வுயிர்க்கும் இதமளித்தோன் வாழியே
அருள்விரிக்கும் அரங்கத்தான் அடியிணையோன் வாழியே
அழகாரும் கூரத்தாழ்வான்தன் அடியிணைகள் வாழியே

மட்டவிழும்பொழில்சூழ் குருகேசர் மறைத்தமிழ் வாழ்ந்திடுநாள்
மண்ணுலகில் ஸ்ரீபாஷ்யம் விளங்கிடவந்து பிறந்தவர் நாள்
எட்டுமிரண்டும் இசைந்த சுலோகமிசைத்திட வந்தவர் நாள்
இல்லையெனச்சிவமென்றெதிரிட்டு எழுத்திட வந்தவர் நாள்
துட்டகுதிர்ட்டிகள் மாயிகள் வாழ்வைத் துணித்திட வந்தவர் நாள்
சூரியபூமியராரியரென்று துதித்திட வந்தவர் நாள்
அட்டதிசைக்கும் நிறைந்த பெரும்புகழ் அந்தணர்வாழ் கூரத்தாழ்வான்
வந்தருளியநாள் தையில் விளங்கிடும் அத்தமது நன்னாளே.

T.C.A. Venkatesan

ஸ்ரீ:



# ஸ்ரீகூரத்தாழ்வான் வைபவம்

ஸ்ரீமதுபயவேதாந்த மஹாவித்வான்
பெருமாள்கோவில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்யஸ்வாமி
எழுதியருளியது.

ஸ்ரீ கூரத்தாழ்வான் கைங்கர்ய ஸபை
கூரம், (காஞ்சீபுரம் வழி)
631 502

ஸ்வபானு தை ஹஸ்தம்
I Edition - 10-2-2004
II Edition - 30-1-2005
**விலை ரூ. 10.00**

இப்புத்தகத்தை வெளியிடுவதற்கு அனுமதி அளித்த
ஸ்ரீ உ.வே. பிரதிவாதிபயங்கரம்
ரங்கநாதாசார்ய ஸ்வாமிக்கும்
அவரது குடும்பத்தினருக்கும்
நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்

வெளியீடு
**ஸ்ரீ கூரத்தாழ்வான் கைங்கர்ய ஸபை,**
கூரம், (காஞ்சீபுரம் வழி). 631 502
Ph : 044-28447520

அச்சிட்டோர்
**ஆர். என். ஆர். பிரிண்டர்ஸ்**
தாண்டவராயன் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005.
போன்: 2844 18 56



ஸ்ரீமதுபயவேதாந்த மஹாவித்வான் மஹாமஹோபாத்யாய ஜகதாசார்ய ஸிம்ஹாஸனாதிபதி
பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி

# ஸ்ரீகூரத்தாழ்வான் வைபவம்

'எம்பெருமான் வைபவத்தைப் பேசித் தலைக்கட்டலாம், எம்பெருமானார் வைபவத்தைப் பேசித் தலைக்கட்ட முடியாது' என்பர் ஆண்டான் எம்பார் முதலானோர்; 'எம்பெருமானார் வைபவத்தைப் பேசித் தலைக்கட்டலாம்; ஆழ்வான் வைபவத்தைப் பேசித் தலைக்கட்டமுடியாது' என்பர் ஆசிரியர்களனைவரும்.

இவ்வாழ்வானோடு ஒப்பிடக் கூடியவர்களும் இவர்க்கு மேம்பட்டவர்களும் முன்னுமவதரித்ததில்லை, பின்னுமவதரிக்கப் போகிறதில்லை. எம்பெருமானது திருவாணையினால் இவ்வாழ்வான் தாமே மீண்டும் இந்நிலத்திலே திருவவதரிக்கத் திருவுள்ளம் பற்றினாலும் முன்பு அவதரித்த தம் நிலைமையை அநுகரிக்க எவ்வகையிலும் வல்லவரல்லர் என்ன வேண்டியிராநின்றது.

புருஷ குணங்களெல்லாவற்றிலுஞ் சிறந்த ஜீவகாருண்யம், ஆசார்ய பக்தி, பகவத் பக்தி, வைராக்யம், பாண்டித்யம், ஸத்கர்மாநுஷ்டாநம் முதலிய எண்ணில் பல்குணங்கட்குக் பிறப்பிடமென்னவமைந்த ஆழ்வானது திவ்ய சரிதத்தை அநவரதம் அநுஸந்திப்பது ஸ்ரீவைஷ்ணவர்கட்கு அவச்ய கர்த்தவ்யங்களில் முக்கியமானதென்று பூர்வாசார்யர்கள் ஒருமிடறாக விரும்பி யிருந்தனர். மாகடல் போன்ற அவரது திருக்கல்யாண குணங்களில் சிறு திவலைகளென்னலாம் படியான சில குணங்களைச் சுருங்கப் பேசி யநுபவித்து ஆநந்திக்க அடியிடுவோம்.

## ஆழ்வான் திருவவதாரம்

பெருமாள் கோயிலென்னும் திருக்கச்சிமாநகரத்திற்கு வடமேற்றிசையின்கணுள்ள கூரமாநகரில், கலி நாலாயிரத்து நூற்றொன்பதாமாண்டாகிய ஸௌம்ய வருஷத்தில் தைமாதம் ஹஸ்த

நக்ஷத்திரத்தில் இந்த மஹான் திருவவதரித்தார். இவர்க்குத் தமிழில் "திருமறு மார்பன்" என்றும், ஸம்ஸ்க்ருதத்தில் "ஸ்ரீவத்ஸாங்கமிச்ரர்" என்றும் திருநாமம் வழங்கப்பெற்று வந்தது. இஃது எம்பெருமானுடைய திருநாமம்.

## திருநாமம்

இத்திருநாமம் இவர்க்கு இடப்பட்டதற்குக் காரணம் யாதெனில்; இதற்குப் பெரியோர் கூறுவதாவது:- பரவாஸுதேவனான எம்பெருமான் இந்நிலவுலகத்திலுள்ள ஸம்ஸாரிகளையும், நித்யஸூரிகளைப்போலே நித்யகைங்கரியம் செய்பவர்களாக ஆக்கிக் கொள்ள விரும்பி இவர்களைத் திருத்திப் பணிகொள்வதற்காகவும் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனங்களுக்காகவும் இந்த லீலா விபூதியில் நேரில் வந்து பிறந்து காரியஞ்செய்ய நினைத்துத் தனது அந்தரங்க கிங்கரனாய், "சென்றாற்குடையாம் இருந்தாற் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள்–என்றும், புணையாமணிவிளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்கரவு" என்கிறபடியே ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்பவனான திருவனந்தாழ்வானைக் கூட்டிக் கொண்டு வந்து, தான் சக்ரவர்த்தி திருமகனாகவும் அவ்வாதிசேஷன் இளையபெருமாளாகவும் அவதரித்து நெடுநாள் வாழ்ந்து மண்ணின் பாரம் நீக்கித் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளின பிறகு, மீண்டுமொருகால் இவ்வாறு திருவவதரிக்கக் கருதிய எம்பெருமான் முன்போல ஆதிசேஷனைத் துணையழைக்க "ராமாவதாரத்தில் உமக்கு நான் தம்பியாகப் பிறந்து பட்ட பரிதாபம் போருமே" என்று ஆதிசேஷன் விநோதார்த்தமாகக் கூற, அதற்கு எம்பெருமான், "இந்த விசை நீ தமையனாகவும் நான் தம்பியாகவும் பிறப்போம்" என்று மறுமொழி கூறி ஆதிசேஷனையழைத்துக் கொண்டு வந்து, தான் கண்ணபிரானாய்ப் பிறக்க, சேஷன் பலராமனாய்ப் பிறந்தான். அத்திருவவதாரத்திலே எம்பிரானது திருவுள்ளத்தில் தோன்றின

தென்னவென்றால், 'அந்தோ! இது வரை நாம் சேஷித்வத்தையே தலைக் கொண்டு இந்த அடிமைச் சுவடு புரியாமல் தானே பாழ்பட்டோம்; சேஷித்வ நிலைமையிற் காட்டிலும் சேஷவ்ருத்தியே பரமபோக்யமாயிரா நின்றது! இப்படிப்பட்ட சேஷவ்ருத்தியை மேற்கொண்டே நாம் இன்னுஞ் சில பிறவி பிறக்கவேணும்' என்று குதூஹலம் கிளர்ந்து விட்டது. அதற்கிணங்க, மீண்டும் திருவனந்தாழ்வானை சேஷியாக அவதரிப்பித்துத் தான் சேஷபூதனாக அவதரித்தான். (அதாவது) சேஷன் இராமானுசனாகத் திருவவதரிக்க, தான் கூரத்தாழ்வானாகத் திருவவதரித்தான். மீண்டும் ஆதிசேஷன் மணவாளமாமுனிகளாகத் திருவவதரிக்க, தான் 'ஹஸ்திகிரிநாதரண்ணா' என்னுந் திருநாமமுடைய ஸ்ரீவத்ஸகுல திலகராகத் திருவவதரித்தான் – என்கிற அவதார ரஹஸ்யரீதியிலே, ஆழ்வான் ஸாக்ஷாத் திருமறுமார்பனான எம்பெருமானது திருவவதாரமாகையாலும், அது தோன்ற அவருடைய திருமார்பில் ஒரு மறு இருந்ததாக ப்ரஸித்தமாகையாலும் ஸ்ரீவத்ஸசிஹ்ந ரென்னும் எம்பெருமானது திருநாமத்தைப்பெற்றார். 'ஸ்ரீவத்ஸாங்கர்' என்பதும் இதற்குப் பரியாய நாமமேயாம்.

## ஆழ்வான் என்ற திருநாமம்

இவர்க்கு ஆழ்வான் என்ற திருநாமம் நிகழ்ந்தமைக்கு அடி யாது என்று ஆராய்ந்தால், ஒரு இதிஹாஸம் பெரியோர் சொல்லிப் போருவதுண்டு;- இவர் பகவத் விஷயத்திலே மிக்க உருக்கமுடையராயிருந்தமையாலே எம்பெருமானார் இவர் பக்கலிலே ஒருரு திருவாய்மொழிப் பொருள் கேட்க விரும்பினார்; இவர் தாம் சேஷத்வத்தின் எல்லையிலே நிற்பவராகையாலே, ஜகதாசார்யரான எம்பெருமானார்க்குத் தாம் ஆசிரியர் போன்று எங்ஙனே பொருளுரைக்க இசைந்திடுவர்?; இசையமாட்டாதொழியவே, முதலியாண்டான் முதலானார்க்கு இவர் திருவாய்மொழிப் பொருள்

சொல்லக்கடவதாகவும் அப்படியே அவர்கள் கேட்டு வந்து எம்பெருமானார் ஸந்நிதியிலே விண்ணப்பஞ் செய்யக் கடவதாகவும் ஒரு நியதி ஏற்பட்டு, முதலிகளனைவரும் இவர்பக்கலிலே கோஷ்டியாகவிருந்து "உயர்வற வுயர்நலமுடையவன்" என்று திருவாய்மொழி தொடங்கினவாறே மதியெலாமுள்கலங்கி மயங்கித் தரைப்பட்டாரிவர்; பரசமயாவதிகள் "பரப்ரஹ்மத்திற்குக் குணமென்பதே கிடையாது; அது நிர்க்குணம்" என்று பிதற்றுகிறார்களே, அவர்களுடைய மிடற்றை பிடித்தாற் போலே ஆழ்வார் முதலடியிலே "உயர்வறவுயர்நல முடையவன்" என்றபடி என்னே! என்றாய்த்து இவர் மோஹித்து வீழ்ந்தது. இங்ஙனே இவர் மோஹித்தவாறே முதலிகளெல்லாரும் எழுந்து எம்பெருமானாரிடம் ஓடிச்சென்று 'காணவாரீர்! காணவாரீர்!!' என்றழைக்க, அவரும் ஓடிவந்து, "அன்று 'எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கிய வெளிவே!' (திருவாய்மொழி **1–3–1**) என்று ஆறுமாஸம் மோஹித்துக் கிடந்த ஆழ்வாரை ஸேவிக்கப் பெறாத குறைதீர இன்று கண்ணாரக் காணப் பெற்றோமே!" என்று உள்ளெலாமுருகிக் குரல் தழுத்துப் பேசித் தண்டனிட்டு நெடும்போது பார்த்திருந்து உணரக் காணாமையாலே அருகே எழுந்தருளி "ஆழ்வான்! ஆழ்வான் ஆழ்வான்!!!' என்று கூவித் திருமுதுகைத் தட்டியுணர்த்த, "தொடங்கும்போதே உயர்வுறவுயர்நல முடையவனென்பதே!" என்று சொல்லிக் கொண்டே துணுக்கென்றெழுந்தார்;– உருக்கத்திலே ஆழ்வாரைப் போன்றமையாலே எம்பெருமானார் 'ஆழ்வான்!' என்று சொல்லித் தட்டியுணர்த்தினாரென்பது பற்றி அன்று முதலாக இவர்க்கு ஆழ்வானென்று திருநாமம் வழங்கலாயிற்று.

## ஆழ்வானுடைய நிஷ்டா விசேஷம்

ஆழ்வான் எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயிப்பதற்கு முன் சிறந்த செல்வம்மல்கிக் கூரமாநகரிலேயே எழுந்தருளியிருக்கும் காலத்திலே பெருமாள் கோயிலில் எம்பெருமான்களுக்கு எவ்வளவு

விபவமாக மஹோத்ஸவங்கள் நடந்தபோதிலும் தாம் அவ்விடத்திற்கு எழுந்தருளாமல் ஸ்வதேசந்தன்னிலேயே அதிதிகளை உபசரித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார். இருக்கையில், பேரருளாளனுடைய வைகாசித் திருநாளை ஸேவிப்பதற்காக வடநாட்டில் நெடுந்தூரத்தில் நின்றும் வந்த இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் கூரத்திலே ஆழ்வான் திருமாளிகையிலே ததீயாராதனம் புஜித்துவிட்டுப் பேரருளாளன் ஸன்னிதிக்குப் புறப்பட்டுச் சென்றனர். கருடோத்ஸவத்தினன்றும் ஆழ்வான் பெருமாள்கோயிலுக்கு எழுந்தருளாதிருக்கக் கண்ட அந்த தேசாந்திரி ஸ்ரீவைஷ்ணவர்கள், "ஆயிரம் பதினாயிரம் பொற்காசுகள் செலவழித்துக் காதம் பலவும் திரிந்துழன்று வந்து பல்லாயிரம் பேர்கள் ஸேவித்துப் போருகிற இந்த மஹோத்ஸவத்தை ஆழ்வான் ஸேவியாமல், தம்மாளிகையையே காத்துக் கொண்டிருக்கிறாரே!" என்றிப்படி இழிவாகச் சில எண்ணங்கள் எண்ணிக் கொண்டு பெருமாள் ஸன்னிதிக்கு வந்தவளவிலே, அவ்விடத்தில் இவர்களுக்குப் பேரருளாளன் ஸேவைஸாதியாதொழிய, 'இஃதென்ன தௌர்ப்பாக்யம்!' என்று இவர்கள் மூர்ச்சை அடைந்தனர். பின்பு பேரருளாளன், அர்ச்சகமுகத்தாலே "ஆழ்வான் திருவடிகளில் நீங்கள் மாநஸமாக அபசாரப்பட்டீர்களாகையால் மீண்டு அவர் திருவடிகளில் சென்று ஸேவித்து, அவரைப் பொறுப்பித்துக் கொண்டாலன்றி, உங்கள் கண்ணுக்கு நான் இலக்காக மாட்டேன்" என்றருளிச்செய்ய, உடனே அவர்கள் தெளிந்து ஆழ்வான் திருவடிகளிற் சென்று வேரற்ற மரம்போலே விழுந்து, முதலில் தாங்கள் எண்ணினபடியையும் பிறகு நடந்தபடியையும் விஜ்ஞாபித்துப் பலமுகமாக ஸ்தோத்ரம் பண்ணிப் பிரார்த்திக்க, ஆழ்வான் புன்முறுவல் செய்தருளி, 'மறுபடியும் நீங்கள் பெருமாள் கோயிலுக்குச் செல்லுங்கள், பெருமாள் குளிரக் கடாக்ஷிப்பர்" என்றருளிச்செய்ய, அவர்களும் மீண்டும் பெருமாள் கோயிலுக்குச் செல்ல, பேரருளாளன் அவர்கள் கண்ணுக்கு இலக்காகி ஸேவை ஸாதித்தான்.

## ஆழ்வானது தேவியார் சிறப்பு

ஆழ்வான் வைபவத்திற் காட்டிலும், அவரது தேவியரரான ஆண்டாளின் வைபவம் அளவற்றிருக்கும். சாஸ்த்ரார்த்தங்களில் ஆழ்வானுக்கு ஏதாவது ஸந்தேஹம் தோன்றினால் தமது தேவியாரைக் கேட்டுத் தணித்துக் கொள்வது வழக்கமென்று பெரியோர் பகர்வர்.

## ஆழ்வான் செல்வங்களைத் துறந்து இராமாநுசனடிக் கீழ்ப் புகுதல்

கூரமாநகரில் இவருடைய திருமாளிகை தேவேந்திரபவனம் குபேரபவனம் முதலியவற்றையும் அதிசயித்துச் செல்வம் மிக விஞ்சியிருந்தது. திருமாளிகை வாசற்கதவுகளிற் கிண்கிணிகளில் ஓசை யோஜனை தூரத்துக்கு அப்பால் ஒலிக்குமென்றால், இவரது ஐச்வரியத்தின் வீறு எத்தகைய தென்னலாம்!; அச்சிறந்த செல்வத்தினால் பல ஏழைகளையும் ஸாதுக்களையும் மற்றும் பலரையும் பலவகையாகப் போஷித்துக்கொண்டு மஹா தர்மிஷ்டரா யெழுந்தருளியிருந்தார்.

நாள்தோறும் பெருமாள்கோயிலில் ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்வல பாரிஜாதமான பேரருளாளனது ஸந்நிதியில் இராத்திருவாராதனம் முற்றும் முடிந்து தீர்வைஸாதமும் அமுது செய்து பெரிய திருவாசற் கதவுகள் மூடப்பட்டபிறகே இவருடைய திருமாளிகை வாசற்கதவு மூடப்படுவது வழக்கம். ஒருநாள், பேரருளாளன் ஸந்நிதியில் ஒரு மஹோத்ஸவ நிமித்தத்தினால் இராத்திருவாராதனம் முடிவுபெறத் தாமதித்ததனால் நியதமான காலத்தில் திருவாசற்கதவு சாத்தப்படாமலிருக்கச் செய்தேயும் இவரது திருமாளிகைக்காவலர் அதனையறியாதாராய் நித்திய வழக்கப்படி நியதமான காலத்தில் திருமாளிகை வாசற்கதவுகளைச் சாத்தினர். அவற்றிற் கிண்கிணிகளின் ஓசை ஒரு யோஜனை தூரத்துக்கு அப்பால் ஒலிக்குமென்று முன்னமே

கூறப்பட்டதே: அவ்வோசை பேரருளாளனது திருச்செவிகட்கு இலக்காயிற்று.

அதனைத் திருச்செவி சாத்திய பேரருளாளன், தனக்கு அந்தரங்கமாகத் திருவாலவட்டம் வீசிக்கொண்டு தன்னோடு ஒரு நீராகக் கலந்து, தான் அர்ச்சாவதார ஸமாதியைக்கடந்து சோதிவாய் திறந்து வார்த்தைகள் அருளிச் செய்யும்படி பரமபாக்கியம் பெற்றிருந்த திருக்கச்சிநம்பியை நோக்கி, 'நம்பீ! இதுவென்? நம்முடைய இராத் திருவாராதனம் முடிவுபெறுவதற்கு முன்னமே நமது கோயிற்கதவு சாத்தப்படுவதென்?' என வினவியருள, 'இவ்வோசை இங்குற்றதன்று; நெடுந்தூரத்தினின்றுங் கேட்கப்படுகின்றது; கூரத்தாழ்வானுடைய திருமாளிகைச் செல்வத்தின் சிறப்பாம் இது' என்று திருக்கச்சிநம்பி விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்ட தேவபிரான் புன்முறுவல் செய்து 'ஆழ்வானது ஐச்வரியமோ நம்மை இங்ஙனே மயக்கிற்று!' என வரைந்தருளி வேறு விஷயங்களைப் பிரஸ்தாவிக்கலாயினன்.

இங்ஙனமாகக் கச்சிநம்பிக்கும் கமலை கேழ்வனுக்கும் நடந்த ஸம்வாதத்தைப்பின்பு கூரத்தாழ்வான் கேட்டருளிப் பரமவிரக்தராகித் தமது ஸகலமான ஐச்வர்யங்களையும் ஸத்பாத்ரங்களில் விநியோகித்துவிட்டு, தமக்கு தேஹயாத்ரா சேஷமாகச் சிறிது சேமித்து வைத்துவிட்டு, இனி ஒரு நல்லாசிரியரை அடிபணிந்து உய்வு பெறவேணுமென்று முயன்றவளவிலே – ''விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ஸ்தாபநாசார்யரான உடையவர் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் ஸந்நியஸித்து இராமாநுச முனியாயினார்'' என்று கேட்டுப் பெருமகிழ்ச்சியோடே பெருமாள் கோயிலுக்கெழுந்தருளி அவ்வெம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்துப் பஞ்சஸம்ஸ்காரம் முதலியவற்றைப் பிரஸாதிக்குமாறு பிரார்த்தித்துப் பெற்று அவர் திருவடிகளின் கீழே நிழலும் அடிதாறும் போலே ஒருகாலும் பிரியாமல் அத்தாணிச் சேவகராய் ஸாமாந்ய சாஸ்த்ரங்களையும் அத்யாத்ம சாஸ்த்ர ஸம்ப்ரதாயங்களையும் ஓதி ஓதுவித்துக் கொண்டு இதுவே போது போக்காக எழுந்தருளியிருந்தார்.

## திருவரங்கமாநகர் சேர்தல்

இப்படியிருக்கும் நாளிலே, தென் திருவரங்கம் கோயில் கொண்ட நம்பெருமாளுடைய நியமனத்தினாலே திருவரங்கப் பெருமாளரையர் கச்சிக்கு எழுந்தருளிப் பேரருளாளனை அருளிச் செயல் இசையாலே போரஉகப்பித்தபோது 'நீர் வேண்டும் வரத்தைத்தரக் கடவோம்' என்று பேரருளாளன் சோதிவாய் திறந்தருளிச் செய்ய, அரையரும் 'நம் இராமாநுசனை நம்பெருமாள் ஸந்நிதிக்குத் தந்தருளவேணும்' என்று பிரார்த்திக்க, இராமாநுசனை விட்டுக் கொடுக்கப் பேரருளாளனுக்குத் திருவுள்ளம் இல்லை யாயினும் சொல்லிற்றுத் தவறவொண்ணாமையாலே 'அந்தோ! அரையராலே வஞ்சிக்கப்பட்டோம்; சிறந்த ரத்னத்தை இழந்தோம்' என்று திருவுள்ளம் நொந்துகொண்டே இராமாநுசனைப் போகவிட, அவரை விட்டகன்று உயிராற்றகில்லாத ஆழ்வான் தாமும் அவருடன் கூடவே புறப்பட்டுத் திருவரங்கமாநகர் சென்று சேர்ந்து அவர் திருவடிக்கீழ்ப் பிரதான சிஷ்யராய், ஸகல சாஸ்த்ர நிபுணதமரென்று அனைவராலும் போற்றப்பெற்றவராய் வாழ்ந்து வந்தார்.

## சரமச்லோகார்த்தம் பெறுதல்

எம்பெருமானார், திருக்கோட்டியூர் நம்பி திருவடிகளிற்சென்று பரம ப்ரயாஸங்கள் பட்டு சரமச்லோக பரம ரஹஸ்யார்த்தத்தை உபதேசிக்கப் பெற்று மீண்டு மடத்துக்கு எழுந்தருளினவளவிலே, ஆழ்வான் உடையவர் ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு நிற்க உடையவரும், "வாராய் ஆழ்வான்! சரமச்லோக பரம ரஹஸ்யார்த்தத்தை நம்பிகள் எனக்கு உபதேசித்தருளி, இவ்வர்த்த விசேஷத்தை ஒருவர்க்கும் செவிப்படாதபடி பேணிக்கொண்டிருக்குமாறு நியமித்தருளினபோது, 'பரம பாகவத சிகாமணியான கூரத்தாழ்வானொருவர்க்கு மாத்திரம் அடியேன் இதனை வெளியிடாதிருக்க முடியாதே' என்று நான் விண்ணப்பஞ்செய்ய, 'ஆழ்வானுக்கு இவ்வர்த்தம் கேட்க அதிகாரம் உண்டேயாகிலும், பல்வகையாலும் அவருடைய அத்யவஸாயத்தைப்

பரீக்ஷித்தறிந்து ஒரு ஸம்வத்ஸரம் சுச்ருஷைகொண்டு சொல்லும்' என்று நியமித்தருளினார்'' என்று ஆழ்வானை நோக்கி அருளிச் செய்ய, அதுகேட்ட ஆழ்வானும் 'மின்னின் நிலையில மன்னுயிர் ஆக்கைகள்' (திருவாய்மொழி 1–2–2) என்ற பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றி ஒரு ஸம்வத்ஸரம் இவ்வுடலுக்கு நிலையுண்டோ இல்லையோ வென்று வியாகுலப்பட்டு ஆலோசித்து, அவ்வர்த்த விசேஷத்தைப் பெற்றாலல்லது தரித்திருக்கமுடியாத பேராசையாலே 'ஆசார்யனது திருமாளிகை வாசலிலே ஒரு மாஸம் பட்டினி கிடக்கை ஸம்வத்ஸர சுச்ருஷையோடு ஒக்கும்' என்று சாஸ்த்ரமுண்டென்றறிந்து அங்ஙனமே மாஸோபவாஸம் கிடந்து அவ்வர்த்தத்தைப் பெற்றார்.

## பொன்வட்டில் தனையெறிந்த புகழுடைமை

இப்படி, தேவுமற்றறியாதே எம்பெருமானார் திருவடிகளிலே பரம பக்தராயிராநின்ற ஆழ்வான், தம்முடைய ஜந்மபூமியிலே தமக்கு தேஹயாத்ரா சேஷமாக முன்பு சில பொருள்கள் சேமித்து வைத்ததும் ஸ்வரூபவிருத்தமாகையாலே அவை நிச்சேஷமாகப் பரித்யஜிக்கத் தக்கவை யென்று திருவுள்ளம்பற்றி ஆசார்யன் ஸந்நிதியிலே விடைபெற்றுக் கூரமாநகர்க்கு எழுந்தருளி அப்பொருள்களைப் பரமபாகவதர்கட்கு விநியோகித்துவிட்டுத் தமது தேவியாரான ஆண்டாளையும் கூட்டிக் கொண்டு புறப்பட்டுப் பெருமாள் கோயிலிலே பேரருளாளனை மங்களாசாஸனம் செய்தருளி நம்பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளாநிற்கச் செய்தே ஸ்ரீமதுராந்தக ஸமீபத்தில் காட்டிடையே எழுந்தருளும்போது தேவியார் ''பயமாயிருக்கிறதே'' என்று சொல்ல; ஆழ்வான், ''மடியில் கனமிருந்தாலன்றோ வழியில் பயமுண்டாவது; அப்படி உன்னிடத்தில் ஏதாகிலுமுண்டோ?'' என்று கேட்டருள, ''ஸ்வர்ணபாத்திரத்தில் அமுது செய்து கொண்டிருந்த தேவரீர்க்கு இலையில் அமுது செய்வது வருத்தமாயிருக்குமே யென்றெண்ணி ஒரு பொன்வட்டிலை மாத்திரம் முன்பு மிகுத்தினேன், அது மடியில் இராநின்றது'' என்று திருச்செவியிலே ஏகாந்தமாக

விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வானும் "பொன்வட்டில் தனையெறிந்த புகழுடையோன் வாழியே" என்னும்படி அப்பொன்வட்டிலைத் தேவியார் கையில் நின்றும் வாங்கிக் காட்டில் தூற்றிலே எறிந்துவிட்டு, உடையவர்க்கு அபயப்ரதாநம் பண்ணின ஸ்ரீமதுராந்தகத்திலே யெழுந்தருளி ஏரிகாத்த பெருமாளைத் திருவடி தொழுது அங்கே திருமகிழடியிலே யெழுந்தருளி 'த்வயம் விளைந்த இடம்' என்று அவ்விடத்தை ஸேவித்து மனமகிழ்ந்து, மற்றை நாள் தொடங்கிப் பயணகதியிலே வழியிலுள்ள திருப்பதிகளை ஸேவித்துக் கொண்டு திருவரங்கம் பெரிய கோயிலெழுந்தருளி முன்பு போல உடையவர் ஸ்ரீபாதத்தில் அத்தாணிச் சேவகராய் எழுந்தருளியிருந்தார்.

திருவரங்கத்தமுதனாரைத் திருத்திப் பணிகொள்ளுதல்

அக்காலத்திலே, கோயில் கொத்திலுள்ளவர்கட்குத் தலைவராயிருந்த திருவரங்கத்தமுதனாரென்பவர் ஒரு நாள் உடையவர் திருமுன்பே வந்து ஸேவித்து "பாவங்கள் கூடுபூரித்துக் கிடக்கிற அடியேனைத் திருத்தி ஸ்வாமிக்கு சேஷமாக்கும்படி ஒரு ஸாத்விகர்க்கு நியமித்தருளவேணும்" என்று விண்ணப்பஞ் செய்ய, உடையவரும் ஆழ்வானை அழைத்தருளி அமுதனாரைக் காட்டி, 'இவர் நம்முடைய வாழ்முதலான நம்பெருமாள் ஸ்ரீகார்யத்துக்குப் பரிவராயிருப்பவர்; இவரது தாழ்வுகளைப் பாராமல் இவரை அநுவர்த்தித்து அநுகூலராக்கி நம்பக்கலிலே கொண்டுவந்து சேரும்' என்று நியமித்தருள, ஆழ்வானும் ஆறுமாதம் அவரை அநுவர்த்தித்துப் பரிபக்வராக்கி உடையவர் திருவடிகளிலே கொண்டுவந்து காட்டிக் கொடுக்க, உடையவரும் அவ்வமுதனாரை ஆழ்வான், திருவடிகளிலே ஆச்ரயிப்பித்தருளினார். "மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக் குறும்பாங்குழியைக் நம் கூரத்தாழ்வான்சரண் கூடியபின்" (இராமாநுசநூற்றந்தாதி – 7) என்றாரிறே அமுதனார் தாம்.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகனருளிச் செய்த குருபரம்பரா ஸாரத்திலே– "பெரிய நம்பி ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் அறுவர்"

என்றருளிச் செய்து, அவர்களாகிறார்'' என்று தொடங்கிச் செய்தருளின விவரணத்தில் அணியரங்கத்தமுதனார் என்ற திருநாமம் குறிக்கப்பட்டிருப்பதைக் காண்பவர்கள் அணியரங்கத்து அமுதனாரென்பவர் இத்திருவரங்கத்தமுதனாரிற் காட்டில் வேறுபட்டவரென்று உண்மையுணராது இவரே அவரென்று சிலர் ப்ரமித்து இவ்வமுதனாரைப் பெரிய நம்பிகளின் சிஷ்யராகக் கருதுவர்களாயினும் இராமாநுசநூற்றந்தாதி அருளிச் செய்த அமுதனார் எம்பெருமானாருடைய நியமனத்தினால் ஆழ்வானை அடிபணிந்து திருந்தினவரென்பதை ஸத்ஸம்ப்ரதாய முணர்ந்தவர் மறவார்கள்.

## ஆழ்வான் அமுதனார்க்ருஹத்தில் ஏகாஹமமுது செய்தல்

அமுதனார் ஆழ்வான் திருவடிகளில் அந்தரங்கராய்க் காலக்ஷேபம் செய்துவருகிற நாளிலே அவருடைய தாயார் ஆசாரியன் திருவடி யடைய, தசாஹம் கடந்தபின்பு ''ஏகாஹத்துக்கு நிமந்த்ரண ஸ்வாமியாக ஒருவரை நியமித்தருளவேணும்'' என்று உடையவர் ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் ஆழ்வானை நோக்கி ''நீர் போம்'' என்ன; ஆழ்வானும் சிறிதும் முகம் கன்றாமல் அப்படியே எழுந்தருள, அமுதனாரும் ''ஆசாரியர் இங்ஙனே எழுந்தருளப் பெறுவதே!' என்று தாழ்ந்து தரைப்பட்டு ஸேவித்து ஏகாஹச்ராத்தத்திலே அமுது செய்தருளப்பண்ணுவித்து, ஏற்கனவே தாமும் தமதுமெல்லாம் அத்தலையிலதாகவே அறுதியிட்டிருக்கு மவராகையாலே அபரிமிதமான பொருளை ஸமர்ப்பித்து 'இவற்றைத் திருவுள்ளம்பற்றியருள வேணும்' என்று பிரார்த்திக்க, ஆழ்வானும் அவருடைய பிரார்த்தனைக்காக அவற்றை அங்கீகரித்துக் கனகவர்ஷமாகத் தெருவிலே வர்ஷித்துக்கொண்டு எல்லாவற்றையும் இறைத்து விட்டுத் திருக்காவேரியிலே நீராடித் திருமண்காப்பு சாத்திக்கொண்டு உடையவர் ஸ்ரீபாதத்திலே சென்று ஸேவித்து நிற்க, உடையவரும் ஆழ்வானை நோக்க, 'அங்குக் கிடைத்த அர்த்தம்

எங்கே?' என்று கேட்க ஆழ்வானும் 'அவை அநர்த்தமாகையாலே அப்போதே கைகழிந்து போயின' என்று நடந்த செய்தியை விஜ்ஞாபிக்க 'இதொரு விலக்ஷணவ்யக்தி இருந்தபடி என்!' என்று திருவுள்ளம் உகந்தருளினர்.

## ஏகாஹமமுதுசெய்ய ஆழ்வானையனுப்பக் காரணம்

நம்பெருமாள் ஸந்நிதித் திறவுகோல் அமுதனாருடைய அதீனத்திலிருந்தபடியால் அதை உடையவர் உபாயமாகக் கைப்பற்ற விரும்பி ஆழ்வானை யழைத்து "நீர் போய் ஏகாஹத்தில் புஜித்து முடிவில் ஸந்நிதித் திறவுகோலைப் பெற்றாலன்றி 'ஸகலம் ஸம்பூர்ணம்' சொல்ல வேண்டா" என்று நியமித்தனுப்ப, ஆழ்வானும் அப்படியே திறவுகோலைப் பெற்று வந்தார்; பின்பு "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று கடல் சூழ்ந்த மண்ணுலகமுற்றும் போற்றும்படி எம்பெருமானார் நம்பெருமாள் ஸந்நிதிக் கைங்கர்யங்களைப் பரிஷ்கரித்தருளினார் என்று ப்ரஸித்தம்.

## ஆழ்வான் வ்ருத்தி க்ரந்தத்தைக் கடாக்ஷித்துத் தரித்துக் கொள்ளுதல்

பின்பு எம்பெருமானார் ப்ரஹ்மஸூத்ரத்துக்கு ஸ்ரீபாஷ்யம் செய்தருளி ஆளவந்தார் திருவுள்ளக் குறையை நீக்கக்கருதி அதற்காக பகவத் போதாயநமஹர்ஷியின் வ்ருத்தி க்ரந்தத்தைக் கடாக்ஷிக்கத் திருவுள்ளமாய் அந்த ஸ்ரீகோசம் காச்மீர மண்டலத்தில் சாரதா பீடத்திலுள்ளதென்றுணர்ந்து ஆழ்வானுள்ளிட்டாரையும் கூட்டிக் கொண்டு யாத்திரையடைவிலே அங்கேற எழுந்தருளித் தம்முடைய வைபவங்களைக் காட்டி வசீகரிக்கப்பட்ட ஸரஸ்வதி பாண்டாரத் தலைவரிடத்தில் நின்றும் அந்த போதாயநவ்ருத்தி க்ரந்தத்தை வாங்கிக் கடாக்ஷித்துக் கொண்டிருக்கையில், அதிமேதாவியான ஆழ்வான் இரண்டாவது அத்யாயம் முதலாக மேலுள்ள பகுதி முழுவதையும் தாம் கடாக்ஷித்துத் நெஞ்சில் தேக்கிக்

கொண்டார். உடையவர் முதலத்யாயம் கடாக்ஷித்துத் தலைக்கட்டினவுடனே அங்குள்ள மதாந்தரஸ்தர்களான வித்வான்களினுடைய துர்ப்போதனையினாலே மனங்கலைக்கப்பட்ட ஸரஸ்வதீபாண்டாரத் தலைவர் அந்த ஸ்ரீகோசத்தை மீட்டு உள்ளே வைத்திட, 'குறையும் காணப்பெற்றிலோமே!' என்று உடையவர் சிந்தித்திருக்க, அதுகண்ட ஆழ்வான் 'ஸ்வாமிந்! நியமித்தருளினால் இந்த வ்ருத்தி க்ரந்தம் முழுவதிலுமுள்ள பங்க்திகளை விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்' என்ன, இராமாநுசன் 'இதொரு புத்தி வைபவமிருந்தபடி என்!' என்று வியந்து உகந்தருளினார்.

## உடையவர் ஸ்ரீபாஷ்யமுரைக்க ஆழ்வான் உசாத்துணை யிருத்தல்

அரண்யத்தில் பெருமாளுக்குப் பாங்கான கைங்கர்யங்களை இளையபெருமாள் முறைவழுவாது நடத்திக் கொண்டு போந்த காலத்து ஸ்ரீராமபிரான் திருவுள்ளமுவந்து 'லக்ஷ்மணா! கருத்தறிந்து காரியஞ்செய்பவல்ல புத்திசாலியான நீ இருக்கும்போது தந்தையான (தசரத) சக்ரவர்த்தி துஞ்சினதாகவே நான் நினைக்கவில்லை' என்றருளிச் செய்தது போல, எம்பெருமானாரும் ஆழ்வானை நோக்கி 'போதாயந வ்ருத்தி க்ரந்தத்தை நெஞ்சில் தேக்கிக் கொள்ளவல்ல உம்மை உடையோமான பின்பு அந்த வ்ருத்தி க்ரந்தத்தை இழந்ததாக நினைக்கின்றிலோம்' என்றருளிச் செய்து, அந்த வ்ருத்தி க்ரந்தம் தமக்குக் கைப்புகுந்ததாகவே நிச்சயித்து மகிழ்ந்து பயணகதியிலே திருவரங்கம் பெரிய கோயில் சேர்ந்து ஸ்ரீபாஷ்யமிட்டருளத் திருவுள்ளமாய் அது செய்யுமிடத்து ஆழ்வானை நோக்கி "நான் வ்ருத்தி க்ரந்தத்தை முழுதும் வாசிக்கப் பெற்றிலேனாகையால் சிற்சில இடங்களில் என்னுடைய பாஷ்யம் அந்த வ்ருத்தி க்ரந்தத்தோடு முரண்படினும் படும்; அப்படி முரண்படுமிடத்து 'வ்ருத்தி க்ரந்தம் இங்கு இப்படியுள்ளது' என்று நீர் உணர்த்த வேணும்" என்று நியமிக்க, "ஸர்வஜ்ஞரான ஸ்வாமி இப்படி ஸாதிப்பது தகாது" என்று ஆழ்வான்

அதற்கு இசையாதொழிய, பிறகு ஒரு ஸங்கேதம் செய்து கொள்ளப்பட்டது; அதாவது – நாம் சொல்லுகிற பாஷ்யத்தை நீர் ஏடுபடுத்தி வரும்போது, வ்ருத்தி க்ரந்தத்தை நெஞ்சிலே தேக்கிக் கொண்டிருக்கிற உமக்கு எந்த வாக்கியம் ஒத்திருக்கவில்லையோ அதை நீர் திருவெழுத்துச் சாத்தாமல் நிறுத்திதவிடுக – என்று.

பிறகு எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்ய, ஆழ்வான் பட்டோலைக் கொண்டு திருவெழுத்துச் சாத்தாநிற்க, சில சில இடங்களில் கீழ்க் கூறிய ஸங்கேதம் ஸபலமாயிற்று. இவ்வாறாக எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்து தலைக்கட்டி "பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேநச லக்ஷ்மண! – த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம" என்று இளையபெருமாளைப் பெருமாள் கொண்டாடினாற்போலே 'நீர் எழுந்தருளியிருக்க ஆளவந்தாரைத் திருநாட்டுக்கெழுந்தருளினாராக நான் நினைக்கவில்லை' என்று ஆழ்வானைப் போரப்பொலியக் கொண்டாடியருளினார்.

## திருக்கோட்டியூர் நம்பி பக்கல் ஸந்தேஹம் தெளிந்து வருதல்

பிறகு எம்பெருமானார் கோஷ்டியிலே உபய வேதாந்த க்ரந்த காலக்ஷேபம் நடவாநிற்க, "ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிரூபகமாகச் சொல்லப்படா நின்றது; இவற்றிலும் அந்தரங்க நிரூபகம் எது?" என்று திருவோலக்கத்திலே ப்ரஸ்தாவம் நிகழ, எம்பெருமானார் ஸர்வஜ்ஞராய் எழுந்தருளியிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்யமுகேந வெளியிடவேணுமென்று திருவுள்ளம் பற்றி, ஆழ்வானை நோக்கி "வாரீர் ஆழ்வான்! திருக் கோட்டியூர்க்கு எழுந்தருளி நம்பியை ஸேவித்து இதனை அறிந்து வாரும்" என்று நியமிக்க, ஆழ்வானும் நம்பி ஸந்நிதிக்கு எழுந்தருளி தண்டன் ஸமர்ப்பித்துச் செய்தியை விண்ணப்பஞ்செய்து ஆறுமாஸம் ஸேவித்திருந்தும் அவர் இரங்கக்காணாமையாலே, "எம்பெருமானார் ஸந்நிதியிலே போய் ஸேவித்து வருகிறேன்" என்று சொல்லிப்

புறப்படப்புக, நம்பி அவரை அழைத்து ''மயர்வறமதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார் 'அடியேனுள்ளான்' என்றருளிச் செய்தபடி கண்டாயே'' என்று மொழிந்தருள, ஆழ்வானும் 'தந்யோஸ்மி' என்றெழுந்தருளினார். இதன் கருத்து யாதெனில்;– திருக்கோட்டியூர் நம்பி எடுத்துக் காட்டிய 'அடியேனுள்ளான்' என்ற பாசுரம் திருவாய்மொழி எட்டாம் பத்தில் 'கண்கள் சிவந்து' என்கிற திருவாய்மொழியில் இரண்டாம் பாட்டு; 'கண்கள் சிவந்து' என்கிற பாட்டும் 'அடியேன் உள்ளான்' என்கிற இப்பாட்டும் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்குமவை. இவற்றுள் 'அடியேனுள்ளான்' என்ற பாட்டில் முதல் விசேஷணத் தினால் 'எம்பெருமான் ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன்' என்றருளிச் செய்யக் கருதிய ஆழ்வார், 'ஆத்மாவினுள்ளான்' என்று சொல்லியிருக்க வேண்டும்; 'என்னுள்ளான்' என்றாவது சொல்லியிருக்க வேண்டும்; இப்படிச் சொல்லாமல் அடியேனுள்ளான் என்று அடிமையையிட்டு ஆத்மாவை நிருபித்தமை தோற்ற அருளிச் செய்கையாலே, ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களிற் காட்டிலும் சேஷத்வமே ப்ரதாந நிருபகமென்றதாயிற்று.

## ஆழ்வான் பௌராணிககைங்கரியம் பெறுதல்

ஒருநாள் நடுப்பகலில் உச்சிவெய்யிலே எம்பெருமானார் தாமொருவராகத் திருவரங்கத்தமுதனார் க்ருஹத்துக்கெழுந்தருள, அமுதனாரும் 'இதுவென் இப்போது!' என்று விஸ்மயத்துடனே ஸேவித்துக் கேட்க, உடையவரும் ''உம்முடைய பௌரோஹித்யக் காணியை நமக்குத் தரவேணும்'' என்ன, அமுதனார் மஹாப்ரஸாதமென்று உகந்து ஹிரண்யோதகதாரா பூர்வகமாக ஆழ்வானை உத்தேசித்து ஸமர்ப்பித்தார். அன்று தொடங்கி ஆழ்வானைப் பௌரோஹித்யத்துக்குக் கட்டளையிட்டு நித்தியம் நம்பெருமாள் ஸந்நிதியிலே புராணம் விண்ணப்பம் செய்யும்படியாக நியமித்தருளினார். இக்கைங்கரியம் இவரது திருக்குமாரரான பட்டர் பரம்பரையாக இன்றளவும் ஸந்ததியார்க்கு ப்ராப்தமாயிராநின்றது. (பட்டருடைய தனியனில் ''ஸ்ரீரங்கேச புரோஹித:'' என்றதும் காண்க.)

## ஓர் ஊமை பெற்ற பாக்கியத்தைக் கண்டு ஆழ்வான் வருந்தினது

உடையவர் ஒருநாள் ஓர் ஊமையை யழைத்து மடத்துக்குள்ளே நிறுத்தி திருவாசற்கதவுகளை யடைத்து ஸம்ஜ்ஞையாலே தமது திருவடிகளைக் காட்டிக் கொடுக்க, அந்த ஊமையும் பாக்யவசத்தாலே 'இத்திருவடிகளே நமக்குத் தஞ்சம்' என்றறிந்து அத்திருவடிகளைத் தனது தலைமேலணிந்து கிடக்க, ஆழ்வான் இதைக் கதவின் புரையாலே கண்டு 'ஐயோ! ஆழ்வானாகப் பிறந்து சாஸ்த்ரங்களைக் கற்றுக் கெட்டேனே! ஊமையாகப் பிறவாதொழிந்தேனே!'' என்று முடிமேல் மோதிக் கொண்டு கதறினாரென்று ப்ரஸித்தம்.

## ஆழ்வானுடைய ஜீவகாருண்யம்

ஆழ்வான் ஒருநாள் ஓரிடத்தே வழிபோகாநிற்க, ஒரு ஸர்ப்பத்தால் பிடிக்கப்பட்ட தவளை கூக்குரலிடக்கேட்டு 'இது ஆரறியக் கூப்பிடுகிறதோதான்!' என்று மோஹித்து விழுந்தார்.

மற்றொருநாள் கார்யார்த்தமாக ஒரு தோட்டத்துக்கு எழுந்தருள, அங்கே அப்போதுதான் ஒருவன் ஒருவாழைக்குருத்தை அறுத்துக் கொண்டு போக, அதில் நின்றும் பால் பெருகா நிற்கக்கண்டு மூர்ச்சித்து விழுந்தார்.

பின்னுமொருகால் திருக்காவேரியிலே தண்ணீர்க்குடத்தை இடுப்பிலே எடுத்துவைப்பாரில்லாமல் வருந்திநின்ற ஒரு பெண்ணுக்குத் தண்ணீர்க்குட மெடுத்துவைத்து வழிநடத்தி யருளினார். இவைபோல்வன மற்றும்பல இதிஹாஸங்களும் ப்ரஸித்தம்.

## ஆழ்வானுடைய ஆத்மகுண பரிபூர்த்தி

அக்காலத்திலே அரசாண்டுவந்த சோழராஜன் வைஷ்ணவ த்ரோஹியாகையாலே ஆங்காங்குள்ள விஷ்ணு ப்ரதிமைகளை யெடுத்து எறிந்துவிடவேணுமென்று முயன்றபோது அவனுக்கு

இஷ்டரானவர்கள் "மந்த்ரபூர்வகமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்ட விஷ்ணு பிம்பங்களை அழியச் செய்தால் உனக்கு பெருத்த தீங்கு விளையும்" என்று சொல்ல, அது கேட்ட சோழன் 'அந்தப் பிரதிமைகளில் தெய்வ சக்தியை உத்வாஸநம் பண்ணி அழியச் செய்வோம்' என்று நிச்சயித்து ஒரு பார்ப்பானுக்குப் பணங்கள் கொடுத்து 'நீ (ஒருவர் கண்ணிலும் தென்படாதபடி தன்னை மறைக்க வல்ல) அத்ருச்யாஞ்ஜநம் இட்டுக் கொண்டு உத்வாஸநம் பண்ணு' என்று ஆஜ்ஞாபிக்க, அவனும் திவ்ய தேசங்களிலே சென்று அப்படியே அத்ருச்யாஞ்ஜநமிட்டுக் கொண்டு உத்வாஸநம் பண்ணி பகவத் விக்ரஹங்களைக் கடலிலே எடுத்தெறிகிற செய்தியை எம்பெருமானார் திருச்செவிசாத்தி 'நாம் நெடுநாளாக இத்திருவரங்கம் பெரிய கோயிலை விடாதே நோக்கிக் கொண்டு போருகிறோம்; இவ்விடத்துக்கும் அழிவு வரும்படி ஆஸுரவர்க்கம் மேலிடா நின்றது; இனிமேல் செய்ய வேண்டுவதென்?' என்று வியாகுலப்பட்டுப் பெரிய நம்பியோடே சிந்தித்திருக்க, "நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒரு பிரதக்ஷிணம் வரும்படியாக உம்முடைய சிஷ்யர்களில் ஒருவரை என்பின்னே அனுப்ப வேணும்; என்பின்னே வாரா நின்றால் 'ஒருவன் பின்னே போகிறோம்' என்று தன்னெஞ்சில் படாதே நிழல்போலே என்னைப் பின் செல்பவனாக இருக்கவேணும்; அப்படிப் பட்ட ஒரு சிஷ்யனைப் பார்த்தனுப்பும்" என்று பெரியநம்பி திருவாய் மலர்ந்தருள, இப்படிப்பட்ட ஆத்மகுண பரிபூர்ணரான சிஷ்யர் ஆழ்வானொருவரே என்பது உடையவர்க்கு நன்கு தெரிந்திருந்தும் இதனைப் பெரியநம்பி திருவாக்கினால் வெளியிடவேணுமென்றெண்ணிக் கொண்டு நம்பியை நோக்கி "இப்படிப்பட்ட சிஷ்யர் இவ்விடத்தில் இருப்பதாகத் தெரியவில்லையே!" என்று சொல்லி நிற்க, "நம் கூரத்தாழ்வானை அனுப்பலாகாதோ?" என்று நம்பி நியமித்தருள, அருகிலிருந்த ஆழ்வான் இதைக்கேட்டு 'நம்பிகள் நம்ஸ்வரூபத்தினுண்மையை இங்ஙனே யறிந்து பல சிஷ்யர்களின் முன்னே இப்படி அருளிச்

செய்யும்படியான பாக்கியம் பெற்றோமே!' என்று பெரு மகிழ்ச்சி யடைந்து, நம்பிகளின் திருவுள்ளப்படியே பிரதக்ஷிணத்திற்குப் பின்சென்றார். (இந்த இதிஹாஸம் திருவாய்மொழி ஏழாம் பத்தில் பத்தாம் திருவாய்மொழியில் ஐந்தாம் பாட்டில் "பலரடியார் முன்பருளிய" என்றவிடத்து ஈடுமுப்பத்தாறாயிரத்தில் காணத்தக்கது.) இப்படிப்பட்ட ஆத்மகுண பரிபூர்த்தி ஆழ்வானொருவர்க்கே அஸாதாரணமென்பது நிர்விவாதம்.

## ஆழ்வானுக்குத் திருக்குமாரர்கள்திருவவதரித்தல்

ஆழ்வான் தமது செல்வத்தை முற்றும் துறந்து எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்தது முதல் நாடோறும் உபாதாநகாலத்திலே திருவரங்கத்தில் சில திருமாளிகைகளில் உஞ்சவ்ருத்தி செய்து அதுகொண்டு குடும்ப காரியத்தை நிர்வஹித்துக் கொண்டு ஒவ்வொருநாளும் கிடைக்கிற உணவுப் பொருள்களில் மறுநாளைக்கென்று சிறிதும் சேஷப்படுத்தி வைத்துக் கொள்ளாமல் அன்றன்றைக்கு தேஹயாத்திரை நடத்தியருளுகையில் ஒருநாள் விடாப்பெருமழை பொழிந்ததனால் வெளியே போய் உபாதாநம் செய்து வரக்கூடாமல் போக, அதனால் அன்றைக்கு வெறும் தீர்த்தமாத்திரத்தை உட்கொண்டு 'கண்ணா நான்முகனைப் படைத்தானே காரணா கரியாய் அடியேன் நான், உண்ணா நான் பசியாவதொன்றில்லை ஓவாதே நமோநாரணா வென்று, எண்ணா நாளும் இருக்கெசுச் சாமவேத நாண்மலர் கொண்டு உனபாதம், கண்ணா நாளவை தத்துறுமாகில் அன்றெனக்கவை பட்டினி நாளே' (பெரியாழ்வார் திருமொழி 5–1–6) என்கிறபடியேபட்டினி பாராட்டாமல் 'உண்ணுஞ்சோறு பருகுநீர்த் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமான்' என்றாற்போல அருளிச் செயலநுஸந்தாநமே தாரகமாகக் கொண்டு வேறு உணவின்றியே இருந்திட, அன்றிரவு பெரியபெருமாள் அமுது செய்கிற போது உண்டான திருச்சின்ன ஒலி கேட்டவளவில் இவரது தேவியாரான ஆண்டாள் பெருமாளைக் குறித்து, 'உம்முடைய அடியவர் பட்டினியிருக்க, நீர் குலாவிக் குலாவி

அமுது செய்தருளுகிறீரோ?' என்று நினைத்தவளவிலே ஸர்வஜ்ஞனான ரங்கநாதன் அந்த ஆண்டாள் நினைப்பைத் திருவுள்ளம்பற்றி உடனே தேவஸ்தாந கார்ய நிர்வாஹகரான உத்தமநம்பிக்கு அர்ச்சகமுகேந கட்டளையிட்டு அப்பொழுது தாம் அமுது செய்த அக்காரவடிசிலை ஸகலபரிஜந பரிவாரங்களுடன் அவரைக் கொண்டு ஆழ்வான் திருமாளிகைக்கு அனுப்பியருள, இவரும் இதனை யறிந்து பதறியெழுந்து எதிர்கொண்டு மஹா ப்ரஸாதமென்று அதில் தமக்கும் தமது தேவிக்குமாக இரண்டு திரளைகளை யெடுத்துக் கொண்டு உத்தமநம்பியை அனுப்பிவிட்டு பக்தவத்ஸலனான பகவானுடைய வரம்புகடந்த கருணைத்திறத்தை வியந்து அந்த அடிசிலில் ஒரு பகுதியைத் தாம் அமுது செய்து மற்றதைத் தேவியாருக்குக் கொடுத்தருள, முன்பு தசரதசக்ரவர்த்திக்குப் புத்ரகாமேஷ்டியிற் கிடைத்த பாயஸத்தின் கூறுகளே ஸ்ரீராமலக்ஷ்மண பரத சத்ருக்நர்களின் திருவவதாரத் துக்குக் காரணமானதுபோல இப்பொழுது இவர்க்கும் ஸ்ரீபராசர பட்டர், ஸ்ரீவேதவ்யாஸ பட்டர் என்ற இரண்டு திருக்குமாரர்கள் திருவவதரிப்பதற்கு இத்திரளைகளிரண்டுமே ஹேதுவாயின.

## ஆழ்வான் ராஜஸபைக்கு எழுந்தருளல்

ஆழ்வான் எம்பெருமானார்க்கு உசாத்துணையாயிருந்து தர்சந நிர்வாஹம் பண்ணியருளுகிற காலத்திலே, ராஜேந்திர சோழபுரத்தில் அரசாண்டுவந்த குலோத்துங்க சோழராஜன் துஷ்ட சைவனாகையாலே கள்ளப் பொய்ந்நூல்களை மெய்ந்நூலாகக் கொண்டு தானும் தன் புரோஹிதனுமாக நாட்டிலுள்ள வித்வான்களையெல்லாம் திரட்டி "சிவாத் பரதரம் நாஸ்தி" (சிவனுக்கு மேற்பட்ட தெய்வமில்லை) என்று எழுத்திடச் சொல்லி நிர்ப்பந்திக்க, சிலர் அவ்வரசனுடைய செங்கோன்மைக்கு அஞ்சியும், சிலர் பொருட்கும் பூமிக்குமாசைப்பட்டும் அங்ஙனே எழுத்திட்டார்கள். அப்போது அவ்வரசனிடத்துச் சிறிது மேன்மை பெற்றிருந்த

நாலூரான் என்னுமொரு வைஷ்ணவன் ராஜாவை நோக்கி 'எங்களிராமாநுசன் எழுத்திட்டாலன்றோ எழுத்திட்டதாவது; மற்ற சிற்றறிவினர் இட்டாலென்ன? இடாவிடிலென்ன?' என்று கலஹம் பண்ண, அது கேட்ட அரசனும் அப்போதே இராமாநுசனை அழைத்து வரும்படி ஆள்களையனுப்ப, அவர்களும் உடையவர் மடத்தேறச் சென்றவளவிலே இந்த விருத்தாந்தத்தை யுணர்ந்த ஆழ்வான் 'எம்பெருமானார் ராஜசபைக்கு எழுந்தருள்வராகில் அவர்க்கு ஏதாவது அபாயம் விளையக்கூடும்; உலகுக்கெல்லாம் உயிரான அவரைக் காட்டிக் கொடுக்கத் தகாது; நாமே அவருடைய வேடம்பூண்டு ஸபைக்குச் செல்வது தகுதி' என்று அறுதியிட்டு, அப்போது எம்பெருமானார் நீராட்டத்திற்கெழுந்தருளி யிருப்பதறிந்து அவருடைய காஷாயத்தையும் த்ரிதண்டத்தையும் தரித்துக்கொண்டு அந்த ராஜமநுஷ்யருடனே போகப் புறப்படும்போது பெரியநம்பியும் சில முதலிகளும் தாமுங்கூட வருவதாகப் புறப்பட, அவர்களுடன் ஆழ்வான் ராஜ ஸபைக்கு எழுந்தருளினார். அநந்தரம் உடையவர் நீராட்டஞ் செய்தெழுந்தருளி த்ரிதண்ட காஷாயாதிகளைத் தேடினவளவிலே 'கூரத்தாழ்வான் தரித்துக் கொண்டு ராஜமநுஷ்யருடனே எழுந்தருளினார்' என்று முதலியாண்டான் விண்ணப்பஞ் செய்ய, 'ஆகில் அவருடைய வெள்ளையைத் தாருங்கள்' என்று ஆழ்வானுடைய திருப்பரிவட்டத்தைவாங்கித் தாம் சாத்திக் கொண்டு 'ஆழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் என்ன தீங்கு நேருமோ!' என்று சிந்தித்துத் துவண்டிருக்க, 'இனி ஸ்வாமி இவ்விடத்தில் எழுந்தருளியிருக்கை உசிதமன்று' என்று முதலியாண்டானுள்ளிட்ட முதலிகள் விஜ்ஞாபிக்க, உடையவரும் உடனே புறப்பட்டெழுந்தருளித் திருநாராயணபுரம் சேர்ந்தார்.

## இவ்வரலாற்றில் வரும் ஆக்ஷேபத்திற்கு ஸமாதாநம்

ஆபத்தர்மமாக ஆழ்வான் த்ரிதண்ட காஷாயங்களைத் தரித்தருளினாரென்றும், அப்படியே எம்பெருமானார் வெள்ளை

சாத்திக் கொண்டாரென்றும் சொல்லப்படுகிற இவ்வரலாற்றில் சிலர் ஆக்ஷேபம் கூறுவதுண்டு; தர்ம ஸம்ஸ்தாபநத்திற்காகத் திருவவதரித்த ஆசார்யர்கள் இப்படி தர்ம விருத்தமாக ஆச்ரமவிருத்தமான உடைகளைத் தரித்திருக்கமாட்டார்கள்; பின்புள்ளார் ஏதோ மாறுபாடாகச் சொல்லிவருகின்றனர்; அது நம்பத்தகாத ஐதிஹ்யம் – என்பர்; சரித்ரபரமான தமிழ்வசன நூல்களில் மாத்திரம் இவ்வரலாறு இருக்குமேல் அவநம்பிக்கை யுண்டாக இடமுண்டு; எம்பெருமானார் காலத்திலேயே எழுந்தருளியிருந்த ப்ராமாணிக பண்டித சிகாமணியான கருடவாஹனபண்டிதர் செய்தருளின திவ்யஸூரிசரித மென்னும் சிறந்த ஸம்ஸ்க்ருத காவ்யத்தில் ஐயந்திரிபறச் சொல்லப்பட்டுள்ள இவ்விஷயத்தில் ஆக்ஷேபம் கூறுவது விவேகிகளின் பணியன்று; அக்காவியத்தின் முடிவில் (பதினெட்டாம் ஸர்க்கத்தில்)

சோளஸ்ய ச்ருதிகடு சேஷ்டிதம் யதீந்த்ர:
ச்ருத்வாத ச்ரிதவிமலாம்பரஸ் ஸ ரங்காத்
ஸ்ரீரங்கிந் அவ தவ தாம தர்சநஞ்ச
இத்யுக்த்வா ப்ராஸ்தித விநிவேச்ய கூரநாதம் (74)

(இதன் பொருள்:– சோழனுடைய கடினமான செய்கையை எம்பெருமானார் கேள்விப்பட்டு வெள்ளைத் திருப்பரிவட்டம் சாத்திக் கொண்டு 'அழகிய மணவாளா! உன் கோயிலையும் தர்சநத்தையும் காத்தருள்' என்று பிரார்த்தித்து விட்டு ஆழ்வானை நிறுத்திவிட்டுத் தாம் கோயிலில் நின்றும் புறப்பட்டருளினார்) என்றுள்ள ச்லோகமும், அதற்குமேல் எழுபத்தேழாம் ச்லோகத்தில்:–

ஆநைஷீத் ந்ருபஸவிதம் மஹார்ஹ பூர்ணம்
ஸ்ரீரங்காத் ஸஹ யதிவேஷ கூரபர்த்ரா

(யதிராஜவேஷம் பூண்ட கூரத்தாழ்வானையும் பெரிய நம்பியையும் ராஜஸபையில் கொண்டு சேர்த்தது ராஜஸைந்யம்) என்றிருப்பதும் முக்கிய ப்ரமாணமாகக் குறிக்கொள்ளத்தக்கன.

அன்றியும், எம்பெருமானார்க்கு அத்தாணிச் சேவகராயிருந்த வடுகநம்பி அருளிச் செய்த யதிராஜ வைபவ மென்னும் ஸம்ஸ்க்ருத ச்லோக ரூபமான சரித்திர நூலிலும்,

காஷாயத்ருத் கூரபதிஸ் த்ரிதண்டீ
ப்ராயாந் மஹாபூர்ணயுதஸ்து தத்ர
வாத்ஸ்யேசமுக்யைஸ் ஸஹிதோ யதீச:
சுக்லாம்பர: ப்ராப திசம் ப்ரதீசீம்.

என்கிற (95 ஆம்) ச்லோகத்தில் இவ்வரலாறு விளங்க உரைக்கப் பட்டது. இங்ஙனே ப்ராமாணிக க்ரந்த ஸம்வாதங்கள் பலவுண்டாகையாலே இவ்வதிஹ்யம் ப்ராமாணிக தமமென்று பெரியோர் கொள்வர்.

உடையவர்க்குத் தெரிவியாமலே ஆழ்வான் ஸ்வபுத்தியாலே த்ரிதண்ட காஷாயங்களைத் தரித்து ஸபைக் கெழுந்தருளினதாகச் சில க்ரந்தங்களிலுள்ளது; மற்றுஞ்சில க்ரந்தங்களிலோ வென்னில்; சோழராஜனிடத்தில் நின்றும் ஆட்கள் வந்தவுடனே எம்பெருமானார் ஆழ்வான் ஆண்டான் முதலானார் பலருமாகக் கூடிக்கலந்து யோசித்து உடையவர் வெள்ளைசாத்திக் கொண்டு வெளியேறி விடவேண்டியதென்றும் ஆழ்வான் யதிராஜவேஷம் பூண்டு ஸபைக்கு எழுந்தருள வேண்டியதென்றும் நிஷ்கர்ஷிக்கப்பட்டு அங்ஙனமே நடந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இவ்விரண்டு வகையும் ஸம்பாவிதமே யாகையால் இவற்றில் விப்ரதிபத்தி இல்லை. இது நிற்க.

## ராஜஸபையில் நடந்த வரலாறு

ஆழ்வானும் பெரியநம்பியும் சோழராஜன் ஸதஸ்ஸிலே எழுந்தருளினவளவில் அவன் இவர்களைப் பார்த்து "சிவாத் பரதரம் நாஸ்தி" (சிவனுக்கு மேற்பட்டதில்லை) என்று எழுத்திடச் சொன்னான்; அதுகேட்ட ஆழ்வான், சுருதிகள் ஸ்ம்ருதிகள் இதிஹாஸங்கள் புராணங்கள் முதலியவற்றைக் கொண்டு "ஸ்ரீமந்நாராயணனே பராத்பரன்" என்று பலமுகமாக உபந்யஸிக்க,

